

ஸ்ரீ கோவிந்த குருப்யோ நம:

# ஸௌராஷ்ட்ர ப்ராஹ்மணர் சரித்திரம்.



பிரசுரித்தவர்கள்:

கோவிந்ததாஸ ஸேவா ஸமாஜம் (Regd.)

&

ஸௌராஷ்ட்ர வித்வத் ஸம்மேளனம்

25, மால் 6-வது தெரு, மதுரை.

ஸௌராஷ்ட்ர விஜயாப்தம் 652

ஸக-ஞு 1886. 1964. குரோதி-ஞு






ஸ்ரீரஸ்து.

ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேஸாய நம:

# ஸௌராஷ்ட்ர பிராஹ்மணர் சரித்திரம்.

*பிரஸித்தம் செய்தவர் :*

மதுரை ஸௌராஷ்ட்ர விப்ரகுலம் மரீசி கோத்திரம்

**பிரஹ்மஸ்ரீ**

**குஜ்ஜரவான் அண்ணுசாமி சாஸ்திரியார் அவர்கள்**



*பொருளுதவி செய்தவர்கள் :*

மதுரை ஸௌராஷ்ட்ர விப்ரகுலம், ஸௌனக கோத்திரம்

பிரஹ்மஸ்ரீ பரசுராம. வெ. பாலுஸாமி அய்யர் அவர்கள்

புத்திரரும், ஓம்கார் டெக்ஸ்டைல்ஸ் புரோப்ரைட்டரும்,

மஹத்தான பிராஹ்ம யக்ஞ கர்த்தாவுமான

**"கீதாகாயக ப்ரவீண" "ஓம்கார்"**

**பிரஹ்மஸ்ரீ P. B. ராதாகிருஷ்ணய்யர் அவர்கள்**

அன்னாரின் தர்ம பத்தினியார் "ஆனந்த காயத்ரீ"

**ஸ்ரீமதி இந்திரா "ஓம்கார் அவர்கள்"**



*பிரசுரித்தவர்கள் :*

**மதுரை கோவிந்த தாஸ ஸேவா ஸமாஜம் (Regd.)**

**2வது ஸௌராஷ்ட்ர வித்வத் ஸம்மேளன நிர்வாகஸ்தர்கள்**

*ஸகஷூ 1886 – ஸௌராஷ்ட்ர விஜயாப்தம் 652. குரோதிஷூ – 1964.*

ௐ

ஸ்ரீ ரஸ்து

ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேஸாய நம:

# பாயிரமும், பனுவலின் சிறப்பும்.

## பாயிரம்:-

*நூலின் பெயர்;* ஸௌராஷ்ட்ர ப்ராஹ்மணர் சரித்திரம்.

*காரணம்:* உபாகர்ம விவாதமும், மங்கம்மாள் ஸாஸனமும்.

*ஆக்கியவர்;* மதுரை ஸ்ரீ K.A. அண்ணுசாமி சாஸ்திரிகள்.

*அளவு;* சஞ்சேபம். (பதிப்பு 1914-ம் ஹூ)

*பயன்:* நினைப்பூட்டுங் குறிப்புகள்.

## பனுவலின் சிறப்பு:

"ஸௌராஷ்ட்ர பிராஹ்மண சரித்திரம்" என்னும் இந்நூலுக்கு விமர்ஸனம் எழுதியனுப்பும்படி மதுரை கோவிந்ததாஸ ஸேவா ஸமாஜ உபதலைவரும் ஸௌராஷ்ட்ர வித்வத் ஸம்மேளனக் காரியதரிசிகளில் ஒருவருமான 'விவேகமார்கதர்ஸி' பிரஹ்மஸ்ரீ T. V. ஹரிகோவிந்தாசாரியார் அவர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க எழுதப்பெற்றது.

A. D. 1689 முதல் 1705 வரை பாண்டிய மண்டலத்தைப் பரிபாலித்து வந்த ஸ்ரீமத் ராஜாதிராஜ — ராஜபரமேஸ்வர ராஜ மார்த்தாண்ட வீரப்ரதாப ஸ்ரீவேங்கடபதிதேவ மஹாநாயலய்ய அவர்கள் சந்திரகிரியில் ரத்தின சிம்மாஸனருடராய் ராஜ்ய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கையில் நமது கமனத்திற்குக் காப்பாற்றிய பாண்டிய மண்டலம் மதுரை ஸமஸ்தானத்தில் காஸ்யபகோத்திரம் விஸ்வநாதநாயலய்ய, திருமலை நாயலய்ய அவர்களின் பௌத்திராளான ஸ்ரீ சொக்கநாத பூபால சௌரி

பட்டமஹிஷிகளான "ஸ்ரீமதி மங்கம்மாள் அவர்கள்" தண்ணளி செங்கோல் முறை பிறழாத ஆட்சி ஓச்சம் பெற்றிருந்தது. அவ்வாட்சியில், மதுராதிகாரியாயிருந்த— ஜோஸ்யம் வேங்கட ரெங்கய்யர் என்பவர் ஸௌராஷ்ட்ர தேஸஸ்தவிப்ர ஸமுகத்தின்பால் பொருமைகொண்டவர்— அவர், இவர்கள் அனுஷ்டித்த ஸ்ராவண உபாகர்ம வைபவத்தைக்கண்டு சகியாது அவ்விப்ர ஸமுகத்தின் முக்கிய பிரமுகர்களான 18 பேர்களை பந்தகானுவில் வைத்துவிட்டார்.

இவர்கள் மஹாராணி மங்கம்மாகாரு அவர்களிடத்தில் அபயம் கோர, மஹாராணியார் இவர்களை விடுவித்து, ஓர் வித்வத் ஸதஸைக் கூட்டி இவர்களுடைய பூர்வோத்தரம் விசாரித்து இவர்களுக்கு மூன்று அபயப் பிரதான ஸாஸனம் வழங்கினர். அந்த வித்வத் ஸதஸில் விளக்கப்பட்டதுதான் ஸௌராஷ்ட்ர பிராஹ்மணர் சரித்திரமென்னும் இச்சிறு பனுவல்.

இடச் சுருக்கம் கருதி ஒரு ஸாஸனம் மட்டும் இதில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

இதன்பிரதிகள் இருப்பில் இன்மையாலும் "இரண்டாவது ஸௌராஷ்ட்ர வித்வத் ஸம்மேளனத்தின்" தீர்மானத்தை அனுசரித்தும், இரண்டாம் பதிப்பாக வெளியிட இசைந்த சமுக ஆசார சீலரும், பிரபல வியாபாரியும், கீதா கானச் செல்வரும் மஹத்தான பிராஹ்ம யக்ஞ கர்த்தாவுமான பிரஹ்மஸ்ரீ ஓம்கார் P. B. ராதாகிருஷ்ணய்யர் அவர்களின் தரும சிந்தனையைப் பெரிதும் பாராட்டுகிறோம். இதுபோன்ற பல பிரசுரங்கள் பல வெளியிடுவாராக.

அன்னாரின் ஸங்கல்பங்கள் இனிது நிறைவேறுக; எல்லாம் வல்ல ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேஸ்வரர் கருணை பாலிப்பாராக

| | |
|---|---|
| *மதுரை,*<br>*ஸௌ. வி. 652.*<br>*விஜயதசமி*<br>*ஸகஸு 1886.*<br>*15-10-1964.* | *தங்கள் விதேயன்,*<br>வஸ்துகவி விப்ரபந்து<br>கு. வெ. பத்மநாபய்யர். |

ஸ்ரீரஸ்து.

**ஓம் ஸஜுதஜுய நம:**

ஸ்ரீ வெங்கடேஸ்வரர் துணை.



# ஸௌராஷ்ட்ரப் பிராமணர் சரித்திரம்.

—•• ❋ ••—

இதிகாஸ புராணங்களில் பிரதிபாதிக்கின்ற 56தேசங்களில் ஸௌராஷ்டரம் ஓர் தேசம். இந்த ஸௌராஷ்ட்ர ராஜ்ஜியம் பூர்வத்தில் மிகச் செல்வம் பொருந்தியதும், செழிப்புள்ளதும், விஸ்திர்ணமுள்ளதுமாய் இருந்தது. அதன் வடக்கில் குஜராத்தி ஸிந்து, மார்வாரி தேசங்களும், கிழக்கில் மேற்கு ராஜஸ்தானமும், மேற்கு மாளவ தேசமும், தெற்கில் நர்மதா, தாபீ நதிகளும், மேற்கில் யவண சமுத்திரமும் இத்தேசத்திற்கு எல்லைகளாயிருக்கின்றன.

இத்தேசத்தின் வடக்கில் ஆரியாவளி மலைகளும், தெற்கில் விந்திய மலைகளும், மத்திய கிரிநாரி, உஜ்ஜயந்தகிரி முதலான சிறு மலைகளும், சுப்பிரமதி, மாஹிரேவா முதலிய சிறு நதிகளுமுண்டு.

பூர்வத்தில் இத்தேசம் 5 இராஜாங்கங்களாகப்பிரிக்கப்பட்டிருந்தது. 1. காம்பேயராஷ்ட்ரம். 2. காத்திரேயாஷ்ட்ரம். 3. விந்தியாராஷ்ட்ரம். 4. மிதிலாராஷ்ட்ரம். 5. ஆரியாராஷ்ட்ரம். இவைகளில் ஆரியாராஷ்ட்ர ராஜ்யம் பெரும்பாகம் மலைநாடாகவும் பாலைவனமாகவுமிருந்தது.

இத்தேசத்தின் சில முக்கியமான பட்டணங்களைக் கூறு வோம். வலபிபுரம், கோஹில்வாரி, ஸௌராஷ்ட்ரநகரி, அனஹ ல்வாரி, மிதிலாநகரி, சம்பாநகரி, தேவகிரி, உஜ்ஜயந்தகிரி, நந்தி, துவாரகை, கம்புவாரி, காத்தியவாரி முதலி யவைகளாம்.

இப்படிப்பட்ட சிறந்த தேசத்தின் செல்வத்தைக் கண்டு அபகரிக்க விரும்பி, சமிபதேசத்து அரசர்களான யவனர், பாரசி கர், மிலேச்சர், கிரேக்கர் முதலானோர் சுமார் கலியுகாதி வரு ஷம் 3672 அதாவது கிறிஸ்து பிறந்த 658-ம் வருஷம் முதல் 400-வருஷகாலம் வரைக்கும் படையெடுத்து கொள்ளையடித்துக் கொண்டு வந்தார்கள். அக்காலங்களிலேயே மேற்கூறிய தே சங்களின் மதக்குருக்களும், ஜெயினரியர்களும், பவுத்த மதஸ் தர்களும் வெகுவாய் இத்தேசத்தில் பிரவேசித்து, இத் தேசஸ் தர்களின் மதங்களைக் கெடுக்க ஆரம்பித்தார்கள். அது முதல் இத்தேசத்தார் தங்களுக்கு நேரிட்ட ராஜ்யக்ஷோபம் முதலான இடையூறுகளைச் சகிக்கக் கூடாமையால் தங்கள் பிரியமான பட்டணங்களை விட்டு கிராமவாஸிகள் கூட தேசாந்திரம் சென்றார்கள்.

இப்படியே இதற்கு ஸமீபத்திலுள்ள பாஞ்சாலதேசம், மிதி லாதேசம், ஸிந்துதேசம், மாளவதேசம், மஹாராஷ்ட்ரதேசம், கூர்ஜரதேசம் முதலான தேசஸ்தர்களும், மேற்படி இடையூறு களை ஸகிக்கமாட்டாமல் தேசப்ரஷ்டர்களானார்கள்.

அம்மாதிரியாய் தேசத்தை விட்டவர்கள் மேற்சொல்லிய உபத்திரவங்களில்லாமல் க்ஷேமமாயிருந்ததேசங்களில் உத்தர தேச விந்திய பர்வத ப்ராந்தியம் தென் இந்தியா முதலான பற்பல ஸ்தலங்களுக்குச் சென்றுவிட்டார்கள்.

இவ்விதமாய்ச் சென்றவர்களில் ஸௌராஷ்ட்ரிய தேச வாஸிகளான பிராம்மணர்கள் எந்தெந்தப் பிரதேசம் தற்கால சவுக்கியமாய் நேரிட்டதோ, அந்தந்தப் பிரதேசங்களில் குடியேறினவர்களானார்கள். அவர்கள் அங்கேயே ஸ்திரமாய் வாஸம் செய்யும்படியாய் நேரிட்டது. சிலர் தென்னிந்தியாவில் நின்று வஸிக்கும்படியாய் நேரிட்டது.

வடராஜ்ஜியத்தில் குடியேறினவர்கள் தங்கள் ஸௌராஷ்ட்ர தேச நடை உடை பாஷைகளைவிட்டு அந்தந்த தேச நடை உடை பாஷைகளோடு ஒத்து இருந்தபடியால் அந்தந்த தேசப் பிராம்மணர்களோடு அவர்கள் அத்தேச பாஷை முதலானவைகளையே அவலம்பித்து இருக்கிறார்கள்.

தென் இந்தியாவில் குடியேறினவர்கள் மாத்திரம் தங்கள் ஸ்வதேச நடை உடை பாவனைகள் இந்தத் தேசஸ்தர்களோடு ஒத்திராமையால் அந்தந்த வர்ணஸ்தர்களோடு கலந்துக் கொள்ளவும் நடவடிக்கைகளை அனுசரிக்கவும் கூடாமையாய் விட்டது. அப்படியே நாளிது வரையில் இருந்துகொண்டு வந்திருக்கிறார்கள். அப்படியிருந்தும் ஸ்வய பாஷையையும் லிபியையும் நடை உடை முதலான கர்மங்களனைத்தையும் தவறாமல் நடத்திக் கொண்டு வருகிறார்கள். இப்படி மஹா ஸமுத்திர மத்தியில் புசலில் திசைதப்பி அலைகிற கப்பலுக்கு பகவதனுக்கிரகத்தினால் ஓர் திட்டு அகப்பட்டு அதிலுள்ளவர்கள் அங்கேயே ஸ்திரமாய் ஸௌக்கியமடைவதுபோல், இத்தேசத்தில் குடியேறினவர்களை நாளிது வரையில் காப்பாற்றுகின்ற பகவானை நாமனைவரும் துதித்து இப்பாஷை முதலானவைகளை விருத்தி செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இத் தேசத்தில் குடியேறினவர்கள் கிருஷி வாணிபம் முதலான ஜீவனோபாயம்செய்து காலம் கழித்துக்கொண்டு வருகிறார்கள். இந்த ஸௌராஷ்ட்ரியர் மற்றவர்களைப் போலவே தங்கள் தங்கள் வர்ணாச்சிரம தர்மங்களை ஆஸ்ரயித்து வந்ததும் ஸ்வதேச லிபியை அபிவிர்த்தி செய்யாமையினாலே இப்பாஷை பிரபல்யமாகவில்லை. ஆகையால் இவர்களை இத்தேச வாசிகளான ஆந்திர திராவிடாதிகளில் சிலர் அறியக்கூடாதவர்களாயிருக்கின்றார்கள்.

இந்த ஸௌராஷ்ட்ரிய பிராம்ஹணர் ஆதிமுதல் வேதோக்தப் பிரகாரம் ஸூஸ்திரக்காரரின் விதியின்படி சோடசகர்மங்களையும் தங்கள் ரிஷிகோத்திராதிகளோடு ஆஸ்ரயித்து ஆதிமுதல் இடைவிடாமல் சத்கருமநிருதர்களாய் சாஸ்திர யுத்தப் பிரகாரம் யதார்த்தமாய் நடத்திக்கொண்டு வருகின்றார்கள்.

அப்படியிருக்க, மேற்கூறிய ஸௌராஷ்டிரியர் வைசிய சூத்திரர்களோடு வியாபார சங்கேதத்துக் குட்பட்டதி னிடமாக இவர்களையும் அவர்களோ வென்று இத்தேசஸ்தர்கள் பிரமிக்கும்படி நேரிட்டதே தவிர வேறில்லை. ஹிந்து தேசத்தைப் பாராத ஹூணர் அமெரிக்காவின் தீவுகளைக் கண்டு ஹிந்து தேசமென்று பிரமித்தது போலவே, ஸந்தேகமாகிய கொடிய இருளை, ஸௌராஷ்டிரிய லிபி என்னும், சூரியோதயத்தால் போக்கடித்து விதிக்கப்பட்டிருக்கும் சுருதி, புராணாதிகளை எங்கும் பிரசித்தப்படுத்தி, ஸௌராஷ்டிரியர் வஸிக்கும் ஒவ்வொரு ஸ்தலங்களிலும், தங்கள் ஸ்வய லிபியை மற்ற லிபிகளைப் போலவே சகல ஜனங்களும் அப்பியஸிக்கும் பொருட்டு வித்தியாசாலைகளை யேற்படுத்தி, அபிவிருத்தி செய்தால் இப்பாஷை பிரபல்லியமாகும். அத் தெளிவினால் நன்றாய் வெளிப்படும் ஆகையால் ஆதி முதல் ஸௌராஷ்ட்ரவிப்ரர்கள் தங்கள் வர்ணாச்சிரம தருமங்களை வெப்பன்னப்பட்டயப் பிரகாரம் தாங்கள் வசிக்கும் தேசங்களிலுள்ள திராவிடாந்திரவிப்ர சிரேஷ்டர் மூலமாய் நித்திய நைமித்திக கருமங்களை நடத்தி வந்திருப்பதுமன்றி மத சித்தாந்தங்களையும் பஞ்சாக்ஷர அஷ்டாக்ஷர உபதேசங்களையும் ஆசாரிய புருஷர்கள் மூலமாய் உபதேசம் பெற்றுக் கொண்டும் வேத விஹிதப்படி நடத்திக்கொண்டும் வருகின்றார்கள். ஆகையால் ஸௌராஷ்ட்ர நிர்ணய சிந்துவில் விதித்திருக்கிற பிரகாரம் நடத்தி வருவதில் சிரத்தை பக்தியுடன் அதிக முயற்சி யெடுத்துக் கொண்டு நடத்தும்படி செய்யக் கடவுளைப் பிரார்த்திக்கின்றோம்.

ஸௌராஷ்ட்ர மஹாராஷ்டர கூர்ஜ்ஜர திராவிடாந்திரர்கள் சமமாக பஞ்சதிராவிடர்கள் என்று சுருதிஸ்மிருதி புராணங்கள் பிரதிபாதிக்கின்றன. அப்படிப்பட்டவர்களில் ஒருவராகிய ஸௌராஷ்டிரிய ஜனங்கள் தென் இந்தியாவில் இரண்டு லக்ஷம் ஜனங்களுக்கு அதிகமாகவே யிருக்கின்றார்கள்.

மேற்கூறிய ஸௌராஷ்ட்ரர்கள் தங்கள் குலாசாரத்தில் வழுவாமலும், ஸத்ஸங்கத்தர்களாய், இகபர ஸாதகமான

பகவதாராதன பக்தர்களாய் முக்தியை யடையும்படி வழிதேடிக் கொள்ளுவார்கள் என்றும் "ஸர்வேஜநா ஸுகிநோபவந்து" என்கிற பகவத் வாக்கியப் பிரகாரம் திரி காலங்களிலேயும் பரமாத்மாவைப் பிரார்த்திக்கின்ரோம்.

**ஸௌராஷ்ட்ர பிராம்மணர்களுடைய பூர்வீக உற்பத்தியைப்பற்றி இதனடியில் விவரிக்கப்பட்டிருக்கிற வேத, சாஸ்திர, புராண இதிஹாஸங்களில் சொல்லப்பட்டிருக்கிற விஷயங்கள் :—**

பிராம்மண உற்பத்தி மார்த்தாண்டா என்ற சாஸ்திரத்தில் 556-வது பக்கம் 22, 23, 24-வது சுலோகங்களில் பூர்வ காலத்தில் சந்திரன் தன்னுடைய பாப பரிஹாரஞ் செய்து கொள்ளும் பொருட்டு ஸோமபுரி என்ற ஊரில் ஸோமநாதேஸ்வர ஸ்வாமி சந்நிதியில் யாகஞ்செய்து பூர்த்தியானதின் பிறகு ஸோமபுரி என்ற ஊரை பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்து விட்டனர். அது முதற்கொண்டு அந்தப் பிராம்மணர்களுக்கு ஸோமபுரிப் பிராம்மணர்களென்றும், ஸௌராஷ்ட்ரப் பிராமணர்களென்றும், நாமதேய மேற்பட்டு அவர்கள் சில காலத்தின் பிறகு ஜுனுகடா, மாங்கருலா, யபுராமந்தர், நவாநாகர், பூஜுஊனு, டெலவாடா, பிரபாஸபட்டணம், மஹுவா, வாஸாபடா, கோகா, சித்தோடா என்னும், சில ஊர்களில் வாசஞ் செய்து கொண்டிருந்தார்களென்று ஸ்கந்தபுராணத்தில் நாகர காண்ட வர்ணனையில் 193, 195-வது அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. மேலும் இந்த ஸௌராஷ்ட்ர பிராம்மணர்களுக்கு காண்டலோலா பிராமணர்களென்றும், நாகரப் பிராம்மணர்களென்றும், பெயருண்டாகி யிருக்கிறதற்குக் காரணம் : பூர்வம் மாந்தாதா சக்கரவர்த்தி அரசாண்ட காலத்தில், பிர்மாவினுடைய உத்திரவின்படி கண்வமஹாமுனி தன்னுடைய சிஷ்யனை காலவ ரிஷியைப் பார்த்து "ஸௌராஷ்டிர தேசத்திற் போய் 18000 ஸௌராஷ்ட்ர பிராம்மணர்களை அழைத்துக் கொண்டு வருக" என்று ஆக்ஞாபிக்க அந்தக் காலவரிஷி ஸௌராஷ்ட்ர தேசத்திற்குப்போய் ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்களை கண்ணுவ மஹாமுனி ஆச்சிரமத்திற்கு அழைத்துக்

கொண்டுபோனுர். அப்போது கண்ணுவமஹாமுனி பகுலார்க்க மென்னும் பட்டணத்தை யுண்டாக்கி அப்பிராமணர்களை அதில் வாசஞ் செய்யும்படி செய்தார். அக்காரணத்தால் காண்ட லோலா பிராம்மணர்களென்று வழங்கி வந்தது.

நாகாரகாண்டத்தில் செமத்காரபுரத்தில் செமத்காரபுரத் தரசன் 72 கோத்திரஸ்தர்களான ஸௌராஷ்ட்ரப் பிராமணர் களைத் தன்னுடைய தேசத்திலிருக்கும்படி வற்புறுத்தி கிராமங் களையும் தானஞ் செய்தார். அவற்றுள் 8-கோத்திரஸ்தர்கள் சில காரணங்களால் ஹிமாலயத்துக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்கள். பாக்கியுள்ள 64-கோத்திரஸ்தர்கள் அந்த ஊரில் வாசஞ் செய்து கொண்டிருந்தார்கள். அதனுல் நாகரப் பிராம்மணர்களென்றும் வழங்கி வந்தது. மேலும் நாகர காண்ட வர்ணனையில் சொல்வதாவது, துர்வாஸ மஹாமுனி ஸௌராஷ்ட்ர பிராம்மணர்களிடத்தில் தனக்கு ஒரு கோவில் கட்டிக்கொள்ளும் பொருட்டு கொஞ்சம் இடம் வேண்டுமென்று கேட்க, அதற்குச் சரியான பதில் கூறுமல் மௌனமாயிருந்த தால் முனிவர் தம்மை அலக்ஷியஞ்செய்ததாகக் கருதி, உங்கள் வம்சம் க்ஷீணஸ்திதி அடையக் கடவதென்று வாக்களித்தார்.

பூர்வம் சாக்ஷாத் மஹா விஷ்ணுவினுடைய அனுமதியினுல் இந்திரன் ஏகோதிஷ்டம் என்னும் எக்ஞம் செய்த காலத்தில் ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்களுக்கு ஏகோதிஷ்டம் என்னும் தானம் கொடுக்கப் போனுர். அப்போது அந்தத் தானத்தை வாங்கமாட்டோமென்று நிராகரித்தார்கள். ஆகையால் இந்திரனுக்குக் கோபமுண்டாகி நீங்கள் தரித்திரர்களாய்ப் போகக்கடவீரென்று சபித்தார்.

பரசுராமர் க்ஷத்திரியர்களை ஸம்ஹாரஞ் செய்ததின் பிறகு ஸௌராஷ்ட்ர தேசத்தில் திரிகோத்திரபுரமென்ற பட்டணத்தில் பிதிர் சிரார்த்தம் செய்வதற்காக ஸௌராஷ்ட்ரப் பிராமணர்களை அழைப்பித்தார். அதற்கு ஒருவரும் வரவில்லை. அதனுல் பரசுராமர் கோபங்கொண்டு நீங்கள் தரித்திரர்களாயும், தேசப்

பிரஷ்டர்களாயும் போகக்கடவீர்களென்று சாபங் கொடுத்தாரென்று பிராம்மண உற்பத்தி மார்த்தாண்டா என்ற கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தைப் பற்றி நாகர காண்ட வர்ணனையில் ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்களுக்கு இந்தச் சாபங்களெல்லாம் கலியுகத்தில் தீரப் போகிறதென்று சௌனகாதி முனிவர்களுக்கு வியாசருடைய சிஷ்யரான சூதபுராணிகர் சொல்லியிருக்கிறார். மேலும் தென் இந்தியாவுக்குப் போய் விடுவார்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

டில்லி சக்கரவர்த்தியான மகம்மது கி.பி. 1024 ஹு காலத்தில் அங்கிருந்த ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் சங்கீத வித்தையில் மஹா பாண்டித்ய முள்ளவர்களாகவு மிருக்கிறார்கள் என்பதை நவாப்பு தெரிந்து கொண்டவுடனே அந்த வம்சத்தார்களைத் தனது ராஜ்ஜியத்தில் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்று கருதி, தனது சேனாதிபதிக்கு உத்திரவு செய்தார். அந்தச் சேனாதிபதி ஸௌராஷ்ட்ர தேசத்திற்குப் போய் அங்குள்ள ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்களைத் தமது ராஜ்ஜியத்தில் வந்து வசிக்கும்படி வற்புறுத்தியதின் பேரில் அவர்கள் அதற்குச் சம்மதிக்காமலிருப்பதை நவாப்புக்குத் தெரிவித்து சைன்னியத்துடன் வந்து பலவிதமாய்த் தொந்தரவு செய்ய ஆரம்பித்தார்கள். இந்தக் கொடுமையைச் சகிக்க முடியாமல் அங்கிருந்த ஸௌராஷ்ட்ரப் பிராமணர்கள் தங்கள் துர்ப் பலத்தை முன்னிட்டு, எவ்விதமாயாவது அந்த நாட்டை விட்டு அப்புறம் போக வேண்டுமென்று கருதி, தத்தம் குடும்பங்களுடன் பிற தேசங்களுக்குப் போய் விட்டார்கள். இந்தச் சங்கதியைத் தெரிந்த அடுத்த நாகர காண்டத்திலுள்ள ஸௌராஷ்ட்ரப் பிராமணர்களும் தென் தேசங்களுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்கள். கலியுகத்தில் இப்படி நடக்குமென்று முன்னமே சூதபுராணிகரால் ஸௌனகாதி முனிவர்களுக்கு நாகர காண்ட வர்ணனையில் சொல்லப்பட்டிருக்கிறது. இது விஷயமாய் ஸமஸ்கிருத பாகவதம் 12-வது ஸ்கந்தம் 37-வது ஸ்லோகத்தில் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த 64-கோத்திரஸ்தர்களான ஸௌராஷ்ட்ரப் பிராமணர்களுக்கு காலாந்திரத்தில் கஷ்டமடைந்து ஆதரிக்கும் பிரபுக்களில்லாமல் பாபரகிதமான தொழில் அதாவது, நெசவு முதலான வஸ்திர நிர்மாணஞ் செய்வார்களென்று! காத்தியாயன ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. மனுஸ்மிருதி 9-வது அத்தியாயம் 75-வது ஸ்லோகத்தில் உலகத்தில் எந்தப் பிராமணர்களானாலும் ஆபத்து காலத்தில் அநித்தியமான சில்ப விர்த்தி செய்து ஜீவிக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், ருக்வேதத்தில் அய்த்தரேய பிராமணத்தில் பூர்வ காலத்தில் கிருத யுகத்தினுடைய அந்திய பாகத்தில் ஆர்யர்கள் ராக்ஷஸர்களால் இம்சைப்பட்டு பாஞ்சால க்ஷேத்திரத்தில் பஞ்சநதி தீரத்தில் வந்து சேர்ந்து பிராமணர்கள் கஷ்ட காலத்தில் ஜீவிக்கும் பொருட்டு, பரத்துவாஜ மஹா முனி நெசவு முதலான கைத்தொழில்களை ஏற்பாடு செய்திருக்கிருரென்று சொல்லப்பட்டிருக்கிறது.

சமஸ்த ஸ்மிருதிகளில் பிராம்மணர்கள் சூத்திரனிடத்தில் தானங்கள் வாங்கினுல் துர்க்கதி அடைவார்களென்று சொல்லப்பட்டிருப்பதனுல் இந்த ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் இதரர்களிடம் தானங்கள் வாங்காமல் நிர்த்தோஷமான நெசவுத் தொழில்களால் ஜீவித்துக் கொண்டு வருவார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

பௌஷ்ய மஹா புராணத்தில் 377-வது பக்கம் 24-வது அத்தியாயத்தில் சொல்லும் விஷயமாவது: இக்கலியுகத்தில் ஸோமநாதபுரத்து ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் மட்டும் எனக்கு அந்தரங்க பக்தரான பிராம்மணர்களென்று! சாக்ஷாத் பரமாத்மா சொல்லியிருக்கிருர். ஸ்ரீ பௌஷிய புராணத்தில் பிரதிசர்க்கப் பருவம் 4-வது காண்டம் 23-வது அத்தியாயத்தில் 365-வது பக்கம் நந்தி சிசுநந்தி உற்பத்தி விர்த்தாந்தம் சொன்னதின் பிறகு வைதீக தர்ம பிரவர்த்தகமான க்ஷேத்திரங்களையுடைய வர்ணனை ராஜ உற்பத்தி விர்த்தாந்தம் சொன்னதின் பிறகு சோமநாதபுரம் அதாவது ஸௌராஷ்ட்ர

ராஜோற்பத்தி விர்த்தாந்தத்தில் சாக்ஷாத் பரமாத்மாவாகிய மஹாவிஷ்ணு, தேவதைகளுக்கு ஸௌராஷ்ட்ர தேச பிராம்மணர்களுடைய மகிமையைச் சொல்லி யிருக்கிறார்.

விஸ்வஸ்பூர்ஜி என்ற ராஜன் யக்ஞம் செய்த காலத்தில் ராக்ஷஸர்களுக்கும் தேவர்களுக்கும் யக்ஞத்தில் அவிர்ப்பாகம் சமமாகக் கொடுத்துவிட்டார். அந்த விஸ்வஸ்பூர்ஜி மகன் யாகம் செய்தார் அதிலும் ராக்ஷஸர்கள் தேவர் ரூபமாக வந்து சமமாக அவிர்ப்பாகம் வாங்கிக் கொண்டார்களென்று தேவர் களாகிய பிராம்மணர்கள் யக்ஞாம்ஸனிடத்தில் முறை யிட்டார்கள். அம் முறையைக் கேட்டு சாக்ஷாத் நாராயண அம்ஸமாகிய அந்த ராஜபுத்திரன் பிராம்மணர்களுக்கும், ராக்ஷஸர்களுக்கும் ஜாதிபேதம் தெரியும்படியாக ஏற்படுத்தி விட்டான். அதாவது ஸாத்மீக குணத்தார் பிராம்மணர்களாக வும், இராஜத குணத்தார் க்ஷத்திரியராகவும், தாமஸ குணத்தார் வைசியராகவும், மூன்று குணங்களிலும் சேர்ந்தவர்கள் சூத்திர ராகவும் ஏற்படுத்திவிட்டார்.

இந்தக் கோரமான கலியுகத்தில் எல்லாத் தேசங்களிலு மிருக்கிற பிராம்மணர்கள் செய்யும்படியான கருமங்கள் ராக்ஷசர்களாலும் தேவர்களாலும் பங்கிட்டுக் கொண்டாலும் ஸௌராஷ்ட்ரதேசப் பிராம்மணர்கள் செய்யும்படியான யக்ஞ யாகங்கள், கருமங்கள், தேவர்கள் மாத்திரந்தான் திருப்தி யடைவார்களென்று மேற்கண்ட பவிஷிய புராணத்தில் 23-வது அத்தியாயம் 366-வது பக்கம் 88-வது ஸ்லோகம் முதல் 104-வது ஸ்லோகம் வரையில் சொல்லப்பட்டிருக்கிறது. மனுஸ்மிருதி 3-வது அத்தியாயம் 50-வது ஸ்லோகத்திலிருந்து 70-வது ஸ்லோகம்வரையில் இந்தப் பிராமணர்களுடைய சங்கதிகளெழுதப்பட்டிருக்கிறது.

இதைப்பற்றி டாக்டர் பால்பர் என்னும் ஆங்கிலேயர் தன் னுடைய சரித்திரமாகிய வல்லபிபுர சரித்திரத்தில் 25-வது வால்யத்தில் ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் தக்ஷிண தேசத் திற்கு வந்துவிட்டதைப்பற்றி பம்பாய் கெஜட்டில் பிரசுரஞ்

செய்யப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார். ஸௌராஷ்ட்ர பாஷை ஸௌரசேனி என்ற ப்ராகிருதபாஷையில் சேர்ந்ததென்றும், ஸௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் தம்முடைய தேசத்தைவிட்டு தக்ஷிணதேசத்திற்கு வருங்காலத்தில் விஜயநகர ப்ராந்தியத்தில் சில வருஷங்கள் வாசஞ்செய்துகொண்டிருந்தார்கள். ஆகையால் சில தெலுங்கு வார்த்தைகள் இந்த ஸௌராஷ்ட்ர பாஷையில் கலந்திருக்கிறதென்று ஸௌராஷ்ட்ர சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது, 1909-ம் வருஷம் பிப்ரவரிமீ 19உ யில் மகா-ள-ள-ஸ்ரீ கொச்சி திவான் பேஷ்கார் A. சங்கரய்யரவர்கள் இந்தியன் பெட்ரியட் என்னும் பத்திரிகையில் ஆங்கில பாஷையில் ஸௌராஷ்ட்ர பிராம்மணர்களைப்பற்றி ஒரு வியாஸம் எழுதிப் பிரசுரஞ் செய்திருக்கிறார்கள். அதில் ஸௌராஷ்ட்ரப் பிராமணர்களுக்கு இந்தத் தென்தேசத்தில் பூர்வகாலத்தில் அரசாண்டு கொண்டிருந்தவர்களும், பிராம்மணர்களும் இவர்களை பிராமணர்களென்று ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியே ஸ்ரீ சிங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகளும் கும்பகோணம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளும் இவர்கள் பிராமணர்கள்தானென்று ஒப்புக்கொண்டு சித்தாந்தம் செய்திருக்கிறார்கள். ஆனால் இதர பிராமணர்கள் போலவே இந்த ஸௌராஷ்ட்ரப் பிராமணர்களுக்குச் சரியான குரு ஆச்சாரியர்கள் இல்லாமையால் ஸோபிக்காமல் போயிருக்கிறது. இதன்றி இந்த சௌராஷ்ட்ரப் பிராமணர்கள் இதரபிராமணர்கள் போலவே விவாஹ உபநயனாதி காரியங்களிலேயும் சுபா அசுப கிரியைகளிலேயும் வேத மந்திரங்களினாலும் சமஸ்த வைதீக காரியங்கள் செய்துகொண்டு வருகிறார்களென்றும் ஸ்ரீசிங்கேரி சங்கராச்சாரியஸ்வாமி அவர்களும் A. சங்கரய்யர் அவர்களும் சொல்லிப் பிரசுரஞ் செய்திருக்கிறார்கள்.

இந்தச் சௌராஷ்ட்ரப் பிராமணர்கள் உற்பத்தி பிரம்மாண்ட புராணம் பூர்வோக்த முதற்காண்டம் 1, 2 வரை உற்பத்தியும், 28 முதல் 30 வரை விவாஹ உற்சவமும் சொல்கிறது. ஸ்ரீ பரமேஸ்வரர் பிரம்ம கபாலத்திலிருந்து வஸ்திர நிர்ணயம் செய்வதற்காக சிருஷ்டித்து தாந்த்ரீக பிரம்மாவினிடம்

கொடுத்து ஷி குழந்தைக்கு தந்துவர்த்தனனென்று திருநாம மிட்டு சூரியபகவானுடைய புத்திரி சாயாதேவி குமாரத்தி குசுமகேலிகா என்பவளை உத்தராயணமான தைமீ பூர்வபக்ஷம் ரதசப்தமி திதியில் சுபமுகூர்த்தம் முடிப்பித்தார். ஷி சூரிய பகவானுடைய புத்திரி குசுமகேலிகா என்பவள் தெய்வலோகத் திலிருந்த கார்பாஷமென்னும் வித்தும் வெற்றிலைக் கொடியும் பாரிஜாத புஷ்பமும் கொண்டுவந்து பூலோகத்தில் பயிர் உண்டாக்கி மேற்கண்ட கார்பாஷமென்ற பஞ்சினிடமிருந்து நூலுண்டாக்கி வஸ்திர நிர்ணயம்செய்து ஷி வஸ்திரத்தைத் திரிமூர்த்திகளுக்கும் தேவாதி தேவர்களுக்கும் மஹரிஷி களுக்கும் இன்னும் சமஸ்தமான ஜனங்களுக்கும் கொடுத்தார் களென்று பிரம்மாண்ட புராணம் பூர்வோக்த முதற்காண்டத்தில் 1, 2 உற்பத்திகளையும் 28 முதல் 30 வரை அத்தியாயங்களில் மேற்கண்ட விசேஷங்கள் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக் கிறது. பூலோகத்திலிருக்கிற பிராம்மண உத்தமர்கள் வருஷா வருஷம் உத்தராயணமான தைமீ பூர்வபக்ஷம் ரதசப்தமி திதியில் விசேஷமாய் அனைவர்களும் கொண்டாடுகிறார்கள்.

### மாட்சிமிக்க மஹாராணி மங்கம்மாள் அவர்கள் கொடுத்த சாசன விபரம்

சாலிவாகன சகாப்தம் 1627ஸு அதாவது இங்கிலீஷ் 1706-ம்ஸு தமிழ் பார்த்திபஸு ஆவணிமீ பூர்வபட்சம் பவுர்ணமி திதியில் ஷியூர் சௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் பிரம்ம யக்ஞமென்ற உபாகர்ம்ம ஹோமம் வைகை நதியில் செய்வித்துக்கொண்டு வருகையில் மதுரை சமஸ்தான புரோஹிதம் ஜோதிஷம் வெங்கட்டரெங்கையர் என்பவர் ஷி சௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் 18 பேர்களையும் பலாத்காரமாய்க் கலகம் செய்து மகாா-ா-ஸ்ரீ பாண்டிய மண்டலாதிபதி சொக்கநாதைய பாரியாள் மகா-ா-ா-ஸ்ரீ மங்கம்மாள் அவர்கள் சமூகத்தில் மேற்கண்ட கலகத்தைப் பற்றி விசாரணைக்கு ஏற்பட்டதில், மேற்கண்ட ராணியம்மாளும் மந்திரி பிரதானி சேனாதிபதிகளும் ஆலோசனை செய்து

திருச்சிராப்பள்ளி ஸ்ரீரெங்கக்ஷேத்திரம் திருவானைக்காவல் ஸ்தலத்தில் விசாரிக்கும்படி உத்திரவுசெய்து அனுப்பினார்கள். மேற்படி ஸ்தலத்தில் விசாரணை காலத்தில் சமஸ்த தேசத்திலிருந்த பிராம்மண உத்தமர்களையும் வரவழைத்து மதுரை சமஸ்தான புரோஹிதம் ஜோதிஷம் வெங்கடரெங்கையர் என்பவர்களையும் ஷெளராஷ்ட்ர பிராம்மணர்கள் 18 பேர்களையும் இந்த வாதி பிரதிவாதிகளையும் மேற்கண்ட திருவானைக்காவல் ஸ்தலத்தில் விசாரணை செய்யும் காலத்தில் மேற்கண்ட பிராம்மண சபையோர்கள் 29 பேர்கள் வரையில் சேர்ந்து ஆலோசனைசெய்து பாகவதம் 1, மனுஸ்மிருதி 2, போதாயனம் 3, கார்த்தியாயனம் 4, தேவலாதி 5, இந்த ஐந்து ஸ்மிருதிகளையும் இன்னும் அநேக சாஸ்திரங்களையும் பரிசோதித்து இந்த சௌராஷ்ட்ரப் பிராம்மணர்கள் நடையுடைபாவனைகளையும் விசாரணைகள் செய்து இவர்கள் பிராம்மணர்கள்தானென்று பிராஹ்மண: வித்வத்ஸபையில் ஒப்புக்கொண்டபின் தண்ணளி மிக்க மஹாராணி மங்கம்மாள் அவர்களால் மூன்று அபயப் பிரதான ஸாஸனங்கள் வழங்கப்பட்டது.



பிராஹ்மண வித்வத் ஸதஸில் குழுமியிருந்த
வித்பன்னர்களின் பெயர்

1 வெங்கட்டநாரணய்யர்
2 பாலையா
3 ஸ்ரீசீனிவாசையா
4 பராசரப்பட்டர்
5 ஸ்ரீரெங்கம நாரணஜீயர், கிரந்தம்
6 ஸ்ரீவேதவியாசய்யர், கிரந்தம்
7 சாக்ஷி வெங்கடகிருஷ்ணசால்லு

8 வெங்கடகிருஷ்ணச்சாரி கிரந்தம்
9 சடகோபஹ, கிரந்தம்
10 அநந்தய்யங்கார், கிரந்தம்
11 ஜெகன்னதாச்சால்லு
12 ராமலிங்கசாஸ்திரி, கிரந்தம்
13 கிருஷ்ணசாஸ்திரி, கிரந்தம்
14 கோபாலகிருஷ்ணசாஸ்திரி. கிரந்தம்
15 நரசிம்மாச்சாரியார்
16 சாக்ஷி தேவராஜய்யர், கிரந்தம்
17 ,, முத்துரெங்கய்யர்
18 ,, தேவோத்தமய்யர்
19 ,, பிரதானி ராகவய்யர்
20 ,, மந்திரி திம்மய்யர்
21 ,, அக்ஷய்யர்
22 ,, வெங்கட்டராமய்யர்
23 ,, வெங்கட்டரமணய்யர்
24 ,, ஸ்ரீரெங்கம்தாதாச்சாரியார், கிரந்தம்
25 தீக்ஷிப்பய்யா
26 நல்லான் சக்கிரவர்த்தி
27 கோபாலாச்சாரியார் கிரந்தம்
28 கோடீஸ்வரய்யர்
29 நாராயணப்பய்யர்

இதேமாதிரி ஜட்ஜ்மெண்டும் சரியான நகலும் இருக்கிறது.

மூலப் பிரதி கொடுத்தவர்

**பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. வெ. சுந்தர்ராமய்யர் அவர்கள்**
21 / 210, தெற்குமாசி வீதி, **மதுரை.**

**பிழை திருத்தம்.**

| பக்கம் | வரி | விபரம் | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 8-ல் | சுருதிக்குப் பின் | ஸ்மிருதி என்றும் |
| 10 | 21-ல் | | போயிருக்கிறது என்றும் |
| 11 | 2-ல் | புத்திரிக்குப் பிறகு | , (கமா)சேர்த்துபடிக்கவும் |

*விஜயன் பிரஸ், மதுரை-64.*

